இம்மானுவேல் துணை

நூதன வர்ணமெட்டுகளால் அமைக்கப்பட்ட

# இரக்ஷண்ய நாம பாடல்கள்

முதற் பதிப்பு.

இஃது,
பழனி டவுன் அமெரிக்கன் மிஷன்
சர்ச்கவுன்சில் A.V. ஸ்கூல் ஹெட்மாஸ்டர்

**M. பால்தேவதாசன்**

என்பவரால் இயற்றப்பட்டு

பழனி,
B. பட்டாபி செட்டியார் அவர்களது
ஸ்ரீ ராதா கிருஷ்ண விலாச அச்சியந்திர சாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.

...ட்] 1924 [விலை அணா 4

1

இம்மானுவேல் துணை.

நூதன வர்ணமெட்டுகளால் அமைக்கப்பட்ட

# இரக்ஷண்ய நாம பாடல்கள்.

முதற் பதிப்பு.



இஃது,

பழனி டவுன் அமெரிக்கன் மிஷன்

சர்ச்கவுன்சில் A.V. ஸ்கூல் ஹெட்மாஸ்டர்

**M. பால்தேவதாசன்**

என்பவரால் இயற்றப்பட்டு

பழனி.

B. பட்டாபி செட்டியார் அவர்களது

ஸ்ரீ ராதா கிருஷ்ண விலாச அச்சியந்திர சாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

காப்பிரைட் ரிஜிஸ்டர்ட்] 1924 [விலை அணா 1

# முகவுரை.



தேவ கிருபையை முன்னிட்டு இந்த இரக்ஷண்ய நாடகபாடல்களை இயற்றியதின் நோக்கத்தை நண்பர்களறிவது நலமெனக்கருதி எழுதுகின்றேன்.

ஆண்டவரின் பணிவிடையை, கிராமங்களில் புற மதஸ்தர்நடுவில் செய்துவருகையில்ஜனங்கள் சுத்தசுவிசேஷப்பங்குகளை வாங்குவதைத்தவிர்த்து தேவாரம், திருப்புகழ், காவடிச்சிந்து டிராமாமெட்டுகளடங்கிய புதியராகங்களிலுள்ள பாட்டுப்புஸ்தகங்கள் தேவையென்றும், சுவிசேஷப்பங்குகள் அதிகாரங்கள்தானே அவைகளைப் பார்த்திருக்கின்றோம் என்று சொல்லி சுவிசேஷப் பங்குகளை வாங்காமலே அனுப்பிவிட்ட அநேக சமயங்களுமுண்டு.

இவைகளைப்பார்த்து ஏன்? சர்வலோக ஆண்டவரின் சரித்திரம். பிரசங்கம், போதனை, சாதனை, அற்புதமுதலியவைகளை மேற்கூறிய ராகங்களில் நான் பாடி சுவிசேஷப்பங்குகளின் விற்பனையை அதிகப்படுத்தக்கூடாதா என உணர்ந்து அன்று முதல் அதிகப் பிரயாசத்தோடு இப்பாடலை அவருடைய நாம மகிமைக்கென்று இயற்றினேன்.

இதில் எல்லோரும் எளிதில்அறிந்துகொள்ளக்கூடியவிதமாய்இலேசான நடையில் பாடல்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன இப்படிப்பட்ட அரும்முயற்சியை நண்பர்கள் அறிந்து ஆண்டவருடைய ஊழியத்தில், இப் புஸ்தகங்களை உபயோகித்து அவரை மகிமைப் படுத்தும்படியாய் அனைவரையும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

தங்கள் விதேயன்

M. பால்தேவதாசன்.

# THE OPINION OF:-

REV., M. S. TAYLOR, Pasumalai.

Union Theological Seminary. 28-1-24.

சுவிசேஷப்பிரபல்யத்தில் உபயோகிக்கும்படியாக அமைக்கப்பட்டிருக்கும் இரக்ஷண்ய நாம பாடல்கள் என்று நாமம் பூண்ட இப்புஸ்தகம் சுவிசேஷப்பிரபல்யத்தில்வாஞ்சைகொண்ட கனம் M. பால்தேவதாசன் ஹெட்மாஸ்டரவர்களால் வெகு நன்றாய்ப் பாடப்பட்டு பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. ஜனங்கள் தற்காலத்தில் அதிகப்பிரியத்துடன் பாடும் ராகங்களில் சுத்த சுவிசேஷசத்தியங்கள் கூறப்பட்டிருப்பது மிகவும் உதவியாயிருக்கும். இப்புஸ்தகம் அநேகருக்குப் பயன்படும் என்று நம்புகிறேன். கர்த்தர் ஆக்கியோனையும் அவருடைய பாடல்களையும் தம்முடைய நாமத்திற்கென்று உபயோகப்படுத்துவாராக.

(Sd) M. S. TAYLOR,
Union Theological Seminary
Pasumalai.

(M. S. டேயிலர்)



# அட்டவணை.



For Copies:—

Apply to

**M. PAUL DEVADASAN,**

HEAD MASTER,

A. V. School,

PALNI; MADURA Dt.,

5





இம்மானுவேல் துணை.

நூதன வர்ணமெட்டுகளால் அமைக்கப்பட்ட

# இரக்ஷண்ய நாமபாடல்கள்.

## முதல்பாகம்.



வசனம்.

கர்த்தருக்குப் புதுப்பாட்டைப் பாடுங்கள். அவர் அதிசயங்களைச் செய்திருக்கிறார். அவருடைய வலதுகரமும் அவருடைய பரிசுத்த புயமும் இரட்சிப்பை உண்டாக்கினது.

(சங்கீதம் 98 1.)

வெண்பா.

தித்திக்கும் தேனே தெவிட்டாத தெள்ளமுதே
முத்திக்கு வித்தாய் முளைத்தவனே—இத்தரையில்
பத்தியுள்ளோ ரோங்கிப் பராபரத்தை யேயுரைத்து
சித்திபெற வேகிருபை செய்.

விருத்தம்.

பேர்பெருகும் பழனிமாநகரந்தன்னில்
பிரபலமாய் நடைபெருகும், ஏ. வி. ஸ்கூலில்
பார்மகிழப் பாடலுற்ற இரக்ஷண்ய நாம
பாடல்தனக்குமதாசீர் புகர்வாய் தேவா.



## 1. திருப்புகழ்.

(நாதவிந்து கலாதி நமோ என்ற மெட்டு.)

இராகம் செஞ்சுருட்டி தாளம் ஆதி.

| | | |
|---|---|---|
| ஆதியந்தமில்லாதா | துணைபுரி | |
| ஜோதி சின்மய வேதா | துணைபுரி | |
| மாதிடம்வந்த நாதா | துணைபுரி | மனுவேலா |
| திரை திறந்த விநோதா | துணைபுரி | |
| மறைபுகழ்மரிமைந்தா | துணைபுரி | |
| குறையகற்றிடவந்தாய் | துணைபுரி | குமரேசா |
| பெத்தலேபிறந்தோனே | துணைபுரி | |
| சுத்தசத்தியவானே | துணைபுரி | |
| நித்தியம் தரும் தேனே | துணைபுரி | நெறிமேவ |
| பாவிகள் பரிகாரா | துணைபுரி | |
| பூவில் பேர்தகத்திரா | துணைபுரி | |
| சேவித்தேனுனை நேரே | துணைபுரி | திரியேகா |
| குருதி சிந்தின கோனே | துணைபுரி | |
| சுருதிதந்த பெமானே | துணைபுரி | |
| கருதிநடத்திடும் கண்ணே | துணைபுரி | கதியீந்தே |
| சிலுவையில் ஜெயங்கொண்டாய் | துணைபுரி | |
| திரைமிகும் கடல் சென்றாய் | துணைபுரி | |
| வலுசர்ப்பந்தனைக் கொன்றாய் | துணைபுரி | வரமீய்ந்தே |
| அடிமை என்றனை ஆண்டே | துணைபுரி | |
| கொடியுனைநான்கொண்டேன் | துணைபுரி | |
| படிமிசை எனக்கின்றே | துணைபுரி | பணிந்தேனே |

பத்துக்கற்பனை தந்தாய் துணைபுரி
பால்கவிக்கரு ளீய்ந்த துணைபுரி
பத்திபாடே நான் பாடத் துணைபுரி பகவானே

---

2 (மீனாட்சிரமண வேதாந்தசுகுண என்றமெட்டு)

இராகம் பியாக் தாளம் திரிபுடை.

பல்லவி.

பாரும் கடைக்கண்ணாலிது தருணமே சுவாமி

சரணங்கள்.

1 பாவத்தால் சோர்ந்தேன்
பாதகார் நேர்ந்தேன்
பாவமே யகன்றோடி நின்திருப்
பாதமண்டிச் சுகித்திட எனை (பாரும்)

2 உலகினில் வேறு
உற்றாரில்லை ஒது
உன்பாதந்துணை தந்திடுதினம்
கொந்துவாடி வருந்திடாதெனைப் (பாரும்)

3 இயேசெனும் சேயா
மேசியா நேயா
ஏழை என் குறல் கேளே நின்திருத்
தாளை அண்டி இவ்வேளை வந்தேனே (பாரும்)

4 பால் மிக அஞ்சி
பாடினேன் கெஞ்சி
பட்சம் வைத்தினி ரட்சைசெய்தெனின்
அட்சம் நீக்கிடு இக்ஷணம் வந்து (பாரும்)

---

3 (தெள்ளுதமிழ் என்றமெட்டு)

இராகம் செஞ்சுருட்டி தாளம் ரூபகம்.

1 கேட்டவரம் தந்தருளும் நேசன் பாவம்
ஓட்டியேவழிநடத்தும் ராஜன் புவி
கெட்டழிந்த மாந்தர்தமை கிட்டிவந்த காரணத்தை
கேளும் வினை மாளும்

2 ஆதமோடு ஏவைசெய்தபாவம் பெரும்
பாதகமெனவறிந்துதேவன் தானே
அற்புதமாய் இப்புவியில் தற்பரன் மனிதனானார்
அன்று மிக நன்று

3 சாபமதை நீக்கிடவும் தேவ னுட
கோபமதை மாற்றிடவுந் தாப மாகத்
தன்னையே மனிதனாக வண்ணமுடனே பிறந்தார்
தானே தொழு மானே

4 கன்னியெனும் அன்னைமரிதன்னில் சுதன்
தன்னயமில்லாதுதித்தார் மண்ணில் அந்த
சாமிதனையே பணிய பூமிவளர் மானிடரே
சாரும் இப்போ வாரும்

5 ஐந்து அப்பம் இரண்டுமீனைக்கொண்டு அன்று
ஐயாயிரம்பேர்களுக்கு நன்று பகிர்ந்
தாற்றினார் பசிப்பிணியை ஓட்டினார் மனமிரங்கி
ஐயன் நமின் மெய்யன்

6 லாசரு என்றமனிதன் செத்து மிக
நாற்றமெடுத்தானதுவை சித்து கொண்டு
அன்னயமதாக என்முன் வண்ணமுடன் வாவெனவே
வந்தான் துதி தந்தான்

3 பாவமில்லா தேவசுதன் மண்ணில் பட்ட
பாடுகளே பாவின்கவி தன்னில் கண்டு
பட்சமுடனே தொழுக இட்சணமே வந்திடவே
பாரும் வந்து சேரும்

---

4 சாவேரி (எந்தனுக்கிரங்கிவாரம் என்ற மெட்டு)

பல்லவி.

பந்தபாசம்யாவும் போக்கி உந்தனடிமையாக்குதல்
விந்தையிலும் விந்தைபெரும் விந்தையாகுமே

அனுபல்லவி.

நிந்தையகற்றிப்புவியின் மைந்தர்களைச் சொந்தமாக்க
ஐந்துகாயங்களினின்று சிந்திய உதிரம்பார்த்து (பந்த)

சத்துருவான பசாசின் தத்துவத்தையடக்கிட 1
எத்தகையிலும்முயன்றும் சித்தியில்லையே
கத்துகின்றபாவியெனக் குத்தமனேகாட்சிதந்து
முத்திதனைக்கண்டடைய புத்திதனைத்தந்தருளும் (பந்த)

அலைவாய்த்துரும்பதுபோல் நிலையில்லாமல்கலங்கி 2
துலைதூரமாகச்சென்ற துஷ்டனையா நான்
விலைகொடுத்தெனைமீட்ட விபரமறிந்திருந்தும்
பழையநிலைவிடாத படுபாவியான என்னை (பந்த)

அஞ்சிமிகக்கெஞ்சிப்பாடும் அடியன்பாவின்கவியை 3
அஞ்சலிசெய்துஅணையும் தஞ்சம்வேறில்லை
நெஞ்சினினிலை நின்னையன்றி நேரிவார் யாருமில்லை
பஞ்சபாதகங்கள்யாவும் துஞ்சிடக்கிருபைசெய்து (பந்த)

---

5 திருப்புகழ் (அபசாரகீர்த்தைப்பட்டு என்ற மெட்டு)

இராகம் கல்யாணி தாளம் ரூபகம்.

1 ஜெபம்செய்யப்போதித்த ஜெகநாதா சதா
திருமறை புகழ்கின்ற குருநாதா

2 தவம்செய்து காட்டிய தனபாலா எந்தன்
சஞ்சலம் நீக்குவாய் குணசீலா

3 பாதத்தரிசனம் கொடுப்பாயே இந்தப்
பாவிக்கருள்தந்து விடுப்பாயே

4 அன்னை பாசத்தோடு வருவாயே தினம்
என்னை அணைத்துணைவு தருவாயே

5 பணிசெய்து தொழுவதே என்பாகம் எல்லாப்
பாவங்கள்போக்குத லுன்பாகம்

6 உடல்பொருளாவிதா னுன்பாகம் அன்று
உதிர்த்ததிருரத்தம் என்பாகம்

7 அடிமைநான் என்னைவிட்டகலாதே உந்தன்
கடமைதான் காப்பது மறவாதே

8 பரலோகராஜனே வருவாயே போற்றும்
பால்கனி பார்த்தாசீர் புரிவாயே

---

6 (கற்பூர தீபஜோதி என்ற மெட்டு.)

இராகம் இந்துஸ்தான் செஞ்சுருட்டி தாளம் ஆதி.

1 சற்குரு ஞானேஜயமே மிகுமென் சாமிநாதா உனைப்
பற்றின என்பாவம் தீர்த்தே ஆள்வாய் பக்தர்போதா
அற்புதமேவிட ஐந்தப்பத்தால் அன்று நீதான் பசி
ஆற்றிய தன்மையைப்பார்த்தவர் மெச்சினரன்போடே தான்
[துயர்க்

கஞ்சிடுமெய்த்தனைத் தாவா   இனித்
தஞ்சம் வேறில்லை தேவா
பஞ்சபாதகம் அஞ்சியோடிடக்
கெஞ்சிய பாலகனை கேள் கேள் கேள் தயவோட   (சற்)

2 நித்தியசோபன சத்தியநாதனே   நீதாவேதா   தேவ
நேசமதைப் புவியீதினிலோதிய   நிமலா நாவா
சுத்தர்கள் போற்றிடும் புத்திரனே ஏசு சுவாமிநாதா   தினம்
பக்தர்பஜனையைப் பாத்து மகிழுறும் பாலா நாலா உந்தன்
பாவவிமோசனப் தாவா   நித்தை
போக எனக்கருள் தேவா   சுதா
முத்திதனைப்பெற நித்தமுயன்றிடும்
சித்தர்ஜெபர்தனைச் சேர் சேர் சேரவேண்டினேன் ()

---

7 (நலங்குசெப்பொன் என்றமெட்டு)

இராகம் இந்துஸ்தான் பியாக் தாளம் ஆதி.

1 சிவந்த அங்கி இலங்கிட நின்று
சிரசில் முள்முடி தனைச்
சுமந்தார் பிடி கருணையே   இயேசுகிறிஸ்து
சுமந்தார் பிடி கருணையே

2 உகந்த தாலுனைத் தேடியே   நன்று
உதித்தார் கன்னிமரியால்
ஓடிப்பிடி கருணையே   இயேசுகிறிஸ்துவை
ஓடிப்பிடி கருணையே

3 தன்னையே பலியாக்கியே   வென்று
தடுத்தார் நரகவழி

தாவிப்பிடி தருணமே இயேசுகிறிஸ்தை
தாவிப்பிடி தருணமே

4 பாசமுற்றனர் பாவியே உன்மேல்
பால்கவியாலே சொன்னேன்
பார்த்துப்பிடி தருணமே இயேசுகிறிஸ்தை
பார்த்துப்பிடி தருணமே

---

8 (பூமிமெச்சிடும் என்றமெட்டு)

இராகம் செஞ்சுருட்டி தாளம் ஏகம்.

1 விண்ணை மண்ணில் நின்று வேறுபாகமாகப்
பிரித்தவர் அதை வகுத்தவர் ஞானமிருத்தவர் தினம்
விளங்கியே இலங்க துலங்கும் ஜோதிகளை
வைத்தவர் விண்ணில் வைத்தவர்

2 தன்னைத்தானே தாழ்த்தி தந்தை சொற்படியே
வந்தவர் துணை தந்தவர் நமையுகந்தவர் தெய்வத்
தன்மை இன்னதென்று சாட்சி கூறியே
பகர்ந்தவர் எங்கும் பகர்ந்தவர்

3 ஆதியந்தமில்லாதவராய் என்றும்
அமைந்தவர் எல்லாம் கடந்தவர் புகழ்சிறந்தவர் தினம்
அண்டரண்டம் யாவும் ஆண்டுகொண்டுவரும்
அற்புதன் நம தற்புதன்

4 பாவிக்காகவந்து பாரில் மாண்டுயிர்த்த
பார்த்திபர் மரிநேத்திரர் துயர் தீர்ப்பவர் நமைக்
கூவியே அழைத்துக் கூட்டிப்போகவந்த
கொற்றவர் எமைப் பெற்றவர்

5 ஜீவ அப்பமான சேயன் யேசுவையே
தேடவே மிகப்பாடவே துயர்வாடவே இந்தச்
சிறியஞானபாலன் கவிதையாலனேகர்
சேரவே உமைச் சேரவே

---

9 (வருத்துவதழகோ என்றமெட்டு)
இராகம் தன்னியாசி தாளம் ஏகம்

பல்லவி.

பாவியைத்தேடி இப்பாரினிலேவந்த
பரமனூர் திருமகனே (பாவி)

அநுபல்லவி.

கூவியே அழைக்கும் கூக்குரல் கேட்டு
மேவியே எனையாளத் தாவியே வாவே (பாவி

சரணங்கள்.

ஒன்றான தேவா ஓரேசருவேசா
உம்பர்பணியும் மேசியா
குன்றாத ஈவை மன்றாடுவோர்க்குக்
கொடுப்பேனென்றுரைத்திட்ட கோதில்லாதமணியே (பாவி

நித்திய ஜீவனைப் பெற்றிடும் வகைதனை
நீக்கமேதாமுக்குரைத்தாய்
எத்திசையோர்களும் பத்தியாய்நடக்கவே
சத்தியத்தைக்கொடுத்த சாமியேகாக்கவே (பாவி)

தருணமே திருக்கரத்தாலாசீர் வாதமே
தந்து காத்திடுவீரே

கிருபையாய் பாவின் கெஞ்சுதல் கேட்டே
வறுமையோடே பிணிவாதைகளை ஓட்டே (பாவி)

---

10 (துடிக்குமயிலில் நடிக்கும் புண்ணியனே என்றமெட்டு)

இராகம் செஞ்சுருட்டி தாளம் ஏகம்

1 மரிக்குமைந்தனைப் புவிக்குவந்தவனே பக்தர்கொண்டாடும்
மாசில்லாத் திருமருந்தே புண்ணியனே என்னை
மணந்து பாவத்தைச் சினந்து என்குறை மறந்து
ஆவியைத் திணந்தந்திடவே
வருவாய் விரைவில் மனமகிழ்வுடனே உனை அண்டினேன்
திருவாய்திறந்து செய்திசொல்லிடவே

2 சிரத்தில் முள்முடி தரித்துக்காத்தவா சிறியன்வினை
தீர்ப்பது உந்தன் கடனேயல்லவா அன்று
சிந்தின ரத்தமே எந்தன் பாவந்தனை
வென்றுசுகிதரும்உந்தன்மருந்ததாம்
திருக்கரங்கொடுத்தெனைப் பிடித்திடுவாய் எனைக்கிட்டிய
தீங்கனைத்தையும் தீர்த்துக்காத்திடுவாய்

3 ஆலயமணி ஓசைகளெழும்ப அகிலமெல்லாம்
அறிந்துஉன்னையே மகிழ்ந்துமேவணங்க இதோ
அருணமாவியைத் திரளதாய் மன
முருகியே சபை பெருகிட இன்றே
ஆசீர்வதித்திடும் பாவின் பாடலை அநேகர்பாடி
பூசிக்க உனைப் புரிவாய் அருளை

---

11 திருப்புகழ் (கருவிலுருவாகிவந்து என்ற மெட்டு)

இராகம் செஞ்சுருட்டி தாளம் ஜம்பை.

உருவகமில்லாத தேவா ஒப்புவமையற்ற மூவா
திருவுருவமாக வந்த திரியேகா
குருதிமிகவே வடிய சுருதிமுடி வேயடைய
கருதியே இகத்தில் வந்தீர் மனுவாக

களிவினை தனையகற்ற பலமெனும் பசாசையோட்ட
மனிதரடைவாக வந்தீர் மறையோனே
இனிய குரலோசை தனை கனியுமனதோடென்னை
அணிய உனதாவி தனை அருள்வாயே

அழகுமிகும் நின்பாதமே அடியனடைந்த செல்வமே
பழுதரவே காக்க வந்த பாற்பொருளே
உலகமெனும் பேயதனால் வலையிலகப்பட்டதினால்
விலகவழியே திறக்க வருவாயே

துதிகள் மிகுந்தே புகழத் துஷ்டரகன்றே விலக
புதிய இதயங்களுமைப் புகழ்ந்தாட
கதிகள் புரண்டோடும் விதம் நவிலுமுனதாவி தினம்
மதியிழந்த மாந்தர் பலர் வந்தோத

தினமும் உமையேயடுத்து ஜெபமெனும் வில்லெடுத்து
அணுகும் வினைதனை மடித்துன் னடிசேர
உனது துணையே கொடுத்து உதவுமுமையே பிடிக்க
மனதுகந்து பாலகருள் வரமீந்தே

---

12. (செந்தாளம்பூ வந்தேனுங்கமழ்—என்றமெட்டு.)
இராகம் செஞ்சுருட்டி தாளம் ஏகம்

கண்ணிகள்.

வந்தே துணை தந்தே காரும்
வான சேனையின் நாயனே (வந்)
உன்தாபரமே அரண் மன்றுடிநின் தாள்சரண்
ஓட்டிவந்திடு அட்டியேதினிக்
கிட்டினேனுனை விட்டிடாமலே (வந்)

அத்தனேபரி சுத்தனே
அனுகூலனே மனுவேலனே (அத்)
நத்தினே னுன்னடியைச் சித்தமிரங்கிப்பிடியே
நரர்க்குஜீவனே உரித்துடனீய
சிரத்தில்முள்முடி தரித்தபுதல்வா (வந்)

பொன்முடி தனை விண்ணில்தரிக்க
இங்கிலம்வந்த புண்ணியா (பொன்)
உன்னையன்றி யென்னைக்காக்க உற்றதெய்வ மில்லைநோக்க
உன்பதமின்றி இன்பம்வேறில்லை
நம்பியபாலே அன்புடனேற்று (வந்)

---

13 (பூலோகமாய்கையிலே—என்றமெட்டு)
இராகம் இந்துஸ்தான்பியாக் தாளம் ஏகம்

வீணனமாய்கையிலே தானாக ஓடியே
விருப்புக்குள்ளாகியே சிறைக்குள்நீ ஏகியே
வெந்துவாடிடவோ நொந்து மாய்ந்திடவோ
வெம்பிவிடும் இன்பமதை நம்பிஎன்றும் சென்றிடாதே (வீ)

செத்துவிடும் நாளையிலே கத்தியழும் காலத்திலே
நித்தியம்போம் நேரத்திலே அந்தன் வரும் வேளையிலே
சொத்தும்வந்திடுமோ மூத்திதந்திடுமோ
சொந்தமில்லை பந்துஜனம் ஐந்துகாயத் தஞ்சமின்றி (வீ)

ஆணுவ மகற்றிவிட்டு ஐபனடி தன்னைக்கிட்டி
வானவ னருளைப்பெற்று வந்திடுவாய் இன்றுதொட்டு
வரம் அருள்வாரே துணை தருவாரே
வஞ்சியரைத் தஞ்சமெனக் கொஞ்சிமகிழ் கொண்டிடாதே (வீ

தேவபாதந்தன்னை நாடு ஜீவகதிதேடி ஓடு
பாவமெனும் பேயைவிடு பக்தருடன்பாடி ஆடு
பால்உரைத்ததையே பார்த்துணர்ந்தறியே
பட்சமுட னிட்சணமே அட்சமின்றி ரட்சிப்பண்டு (வீ)

---

14 (பாதகன் என்வினை தீரையா—என்றமெட்டு)
இராகம் ஆனந்தபைரவி தாளம் ஏகம்

பல்லவி.

என்னை அடிமைகொள்ளையா நான்பாவினன
இகழ்ந்துதள்ளாதேமேசியா (என்)

அநுபல்லவி.

அன்னை தந்தையும்நீரே அணிகலம்யாவும்நீரே
விண்ணில்மகுடம்சூட்டும் வேந்தனும்நீரே ஐயா (என்)

சரணங்கள்

சென்னிமுள்முடி தனையே எனக்காய் அன்று
வண்ணமுடன் சுமந்தாயே
என்னாடை அதற்காய் எளியேனுமக்குச்சேவன்
அண்ணலேநானடிமை அல்லால்வேறில்லைகண்டீர் (எ)

வதைத்தோட்டியே நீநிசாட்டியே முடிசூட்டியே
பாவம்போக்கிட வந்தனர் (ஆதி)

பாவநாசகனே பர
லோக வாசகனே பல
நாளும் உந்தனையே புகழ்ந்திடும் பால்மகிழ்ந்திட
ஆசீர்தந்தருள் (ஆதி)

---

16 (சிறைக்குள் புகுந்தமானமே—என்றமெட்டு)
இராகம் செஞ்சுருட்டி தாளம் ஏகம்

பல்லவி

கிறிஸ்து ஏசுவைத் தவிர வணக்கம்பெற
உரித்துள்ளோ ரில்லை உணர மெய்யாகப்
பரத்தி லிருந்து வந்தாரே உலகைமீட்க
சிரத்தில் முள்முடி பூண்டாரே அந்நாளில் (கி)

தொகையறா

ஆதியாய் அநாதியாய் அண்டபகிரண்டத்தை
ஆள்கின்ற ஆதிவஸ்து
அன்பினால் இன்பமாய் ஆதம்செய் தீவினை
அகற்றிட வந்தகிறிஸ்து

கற்றவர் அறி வாரே கிறிஸ்துசெய்த
காரியம் தெரி வாரே ஆராய்ந்தால்
எட்டியே பிடிப் பாரே ஏசுகிறிஸ்தை
திட்டமா யடிப் பாரே எந்நாளும் (கி)

தொகையறு

ஒன்ருன தேவனே உண்டென்றும் மற்றவை
ஒழிந்துபோம் கல்மண்ணென் றும்
நன்ருக மாமறை கூறிடும்சத்தத்தை
நாடுவீர் தேடி என்றும்

நடுத்தீர்ப்பு நாள் வருகுமே நிலையாநேரம்
நாமதற் கென்னசெய் வோமோ தப்பித்துக்கொள்ள
திடுக்கிட் டலறிடு வோமோ திருக்கரத்தை
தேடிப்பிடித்துக் கொள் வோமோ பயந்தெளிந்து (நி)

தொகையறு

செம்மறியாடுடன் சேர்ந்தவெள் ளாடதைச்
சீர்பெறப் பிரிக்கும் வண்ணம்
தேசிகர்மானிட ஜென்மத்தை யவரவர்
செய்கைபால் பிரிப்பார் திண்ணம்

உற்றுஆராய்ந்து பாரு மேன் நரகவழி
விட்டேபிரிந்து சேரு மேன் இல்லாவிடில்
கெட்டு அழிந்து போவீரே பாவின்சொல்லைக்
கேட்டால் கதி பெறுவீரே இதுஉண்மை (நி)

---

17 (தாதாபாய்நௌரோஜீ—என்றமெட்டு)

இராகம் இந்துஸ்தான்தோடி தாளம் ஏகம்

பல்லவி

வா வா வா ஜெகதீசா வா வா வா

அநுபல்லவி

வந்தே ஆவி [illegible] (வா)

சரணங்கள்

தேவா திருவுருவாய்
தேடிவந்தீர் மனுவாய்த்
தேற்றர வான்றனை சூட்சியினால் எனை
மாற்றிப்புதுப்பியும் சாட்சி பகர்ந்திட (வா)

தொகையறு

பாதாரவிந்தத்தைப் பார்த்த றிய ஆசையுறும் பாவிநானே
பரமஔஷதமாகப் பாரினிலே வந்துதித்த பரம்பொருளான
[கோனே

நித்திய லோகராஜா
சத்திய ஞானவாசா
நேசம் வைத்தினி தாகப்பூ வினிலே
மனுடவ தார மானவா (வா)

தொகையறு

செந்தாமரைபோல்சிவந்தாலும் பாவமதைத்தீர்ப்பேனென்றே
செப்பியநின்மொழிக்கொப்பியே என்பாவந்தீர்ப்பாய்இன்றே

பக்தர்கள் தேடும்பாதா
சித்தர்கள் நாடும்வேதா
பாடும் பால்தனக்கே அருள் தரத்
தேடி வந்தேனுன் திருந்தாள் போற்றியே (வா)

---

18 நாவடிச்சிந்து (மஞ்சுளிகர்குந்தளமின்னே—என்றமெட்டு)
இராகம் புன்னாகவராளி தாளம் ரூபகம்

ஆதிமூல மானஜோதியே அமரர்தொழ விளையகல
அற்புதமாய் வந்தநீதியே இன்றே

அண்டிடினேனென் றனை தந்திடு தினம்
நன்றிகெட்டவ னாகினேன் இனி
அப்பனெனக்கெஞ்ச அஞ்சிடும் அடியேன்பாவம் அகன்றே
ஆகரிப சாசு துஞ்சிடும் [ஓட

ஞாலமீதில் மானிடனாக ஈராறிய துயரினடைய
ராத்திரிதன்னில் நேத்திரமாக வந்த
நாதனே நவ நீதனே வேத
போதனே குண சீலனே உனை
நானறிந்து பாடிஆடிட உனதருளைத் தினமருளே
நம்பினே னென் பாவம்போக்கிட

பாவியென்றெனைத் தள்ளிடாமலே பணிக்தேனுனை மனத்
பார்த்திடு திருப்பாதம் நோக்கினேன் இப் [தேயெனை
பந்தபாச மகன்று ஓடிட
ஐந்துகாயத் தருகில் வந்திட
பாதுகாரோ பாவம்போக்கியே உனையல்லாது துணையேயேது
பால்தனக்குன தாவிமூட்டியே

---

19 (ஹமபு சபு தேக்கோ பியாரி என்றமெட்டு)
இராகம் கமாஸ் தாளம் சாப்பு

பல்லவி.

சத்தியவேதம் புவிக்கு முத்தி வழியாமே (சத்தி)

அநுபல்லவி.

முத்திவழியாமே முத்திவழியாமே (சத்தி)

சரணங்கள்.

அக்ஷயனே சுக்கிறிஸ்து அருளியநாமமே
நிச்சயம் பரலோகத்தின் நேர்வழியாமே (சத்)

இரத்தசாட்சிகளிதால் நடத்தப்பட்டாரே
சித்தியடைந்து தேவபுத்திரரானாரே (சத்)

இகபர வாழ்வினுக் கிசைந்தகுருவாமே
அகமகிழ்ந்தே சுகிக்க அருமருந்தாமே (சத்)

பரமன் திருவடியைப் பார்த்திடவிரும்பும்
பக்தர்க்கு பாலின்கவி பாதையாய்த்திரும்பும் (சத்)

---

20 (ஐயாபழனிமலைவேலா—என்றமெட்டு)
இராகம் சகனு தாளம் ஆதி

தேவா திருக்கண்ணால் பாரும்— நின்
திருக்கரத்தா லாசி கூறும்— நித்திய
ஜீவா பிடித்தேன் துயர் தீரும்— என்
சிறுமை யகற்றித்துணை தாரும்— உனை
தினிய குரு லதனை
அணியும் வித மதனை
புனிதா புகட்ட உனை
பணிவுடனே தொழுதேன் (தேவா)

மூவரான திரி யேகா— ஒரே
தேவனான பர லோகா— இப்
பூவோரை ரக்ஷித்த தேவா— உனைப்
போலசற் குருவில்லை ஜீவா— என்

மனந்தனிலே உனையே
தினந்துதிசெய்து பவ
விஷந்தனையே அழித்து
புகழ்ந்துனையே துதிக்க (தேவா)

பக்தர் பணியும் ஒளி முத்தே— தினம்
பால்கவி புகழ்ந்திடும் வித்தே— அன்று
செத்தோர்க் குயிர்கொடுத்த சித்தே— மாறு
முத்திகொடுக்கும் திரு வஸ்தே— நரர்
உனையும் பிதாவும் ஆவி
தனையும் அறிந்து பாவ
வினையும் விடுத்துக் கதி
தனையே அடுத்து வர (தேவா)

நித்தம் நினைந்துனையே டாடி— என்றும்
நேசித் துன்தருளைத் தேடி— மாறு
பத்து விதிகளைக் கை யாடி— நல்ல
அத்தன் திருவடியை நாடி— அந்த
அகந் தனையே அடுத்து
இகந் தனையே விடுத்து
உகந் துனையே பிடித்து
தினந் துதியே தொடுக்க (தேவா)

---

21 (வனசாட்சி—என்றமெட்டு)
இராகம் இந்துஸ்தான் காப்பி தாளம் ஏகம்

பல்லவி.

குரு நாதா குருதி மிகவுதிர்த்த (குரு)

அநுபல்லவி.

கோதில் லாதமணி ஆதிமூலமான (குரு)

சரணங்கள்.

உலகை ஒருநொடியில் படைத்த உல்லாசா
உம்பர் பணிந்துபோற்ற உதித்த சர்வேசா
அலகை யிடரொழித்த அற்புத நேசா
அருகில்வாரும்-கிருபைகூறும்-ஆசிதாரும்-மோக்ஷந்தீரும் (கு)

மாசில்லா மணியெனு மாமரி பாலா
மனதுக் கிசைந்ததிரு மருந்தெனும் சீலா
ஆசித்தேதனருந்திட அருகில்வா நூலா
ஆசையோடு-நேசமாக-தாசன்மீது-பாசங்கொண்டு (குரு)

பாவஜீவ பரி பாலன தேவா
பரமன்திரு மக னகிய மூவா
ஆவியினருள் தனை அழித் தெனைக் காவா
அகிலமீது-கவலைநீங்க-அரசேவாரும்-துரையேபாரும் (குரு)

பாவிகளைத்தேடியே பாரினில் வந்தாய்
பால்தனைநாடியே பண்போடுகந்தாய்
சேவித்தேபாடிடும் திறமையைத் தந்தாய்
தேவபால-ஞனலோலா-பாவநாசா-பக்தர்நேசா (குரு)

---

22 (பூமிமெச்சிடுமண்ணாலே என்றமெட்டு)
இராகம் செஞ்சுருட்டி தாளம் மிஸ்ர ஏகம்.

வானம்பூமிதனை ஞானமாய்வகுத்த
வல்லவன் மிகநல்லவன் தயை உள்ளவன் தேவ
வர்மம் நீக்கித் தமின் தர்மம் காட்டவந்த
வானவன் ஏக வானவன்

181218

மந்தை ஆயர்போற்ற வந்த ஏசுவையே
வாழ்த்தினால் தொழுதேற்றினால் புகழ்சாற்றினால் அவர்
இந்த காயமீதில் சிந்தும் ரத்தமுன
தாகுமே உன தாகுமே

மாய்கையான பூவின் வாழ்வினாலே லாபம்
வருகுமோ மனமுருகுமோ முத்தி தருகுமோ பேயின்
மைந்தனாவதினால் வெந்துவாடிடுவாய்
வாதனை பெரும் வாதனை

---

உன்னைப்போல் பிறனை எண்ணிப்பார்த்துநட
என்றுதான் மிக நன்றுதான் உனக்கென்றேதான் சொல்லி
தன்னைத்தானே ஈந்து சாக்ஷி கூறினதைத்
தள்ளிடாய் அதைத் தள்ளிடாய்

இயேசுநாமமதை ஓதினாலே பாவம்
ஓடுமே பேயும் வாடுமே ஜெயம் நீடுமே இந்த
உண்மை பாவின் கவி தன்மையாலறிவாய்
உற்றுப்பார் இதை உற்றுப்பார்

---

23 (என்னகேள்விமுறை என்றமெட்டு)
இராகம் பிலஹரி தாளம் ரூபகம்.

பல்லவி

வணங்குவாய் மனமே தேவனை
வஞ்சகப்பேயின் திறத்தால் சஞ்சலமணுகாது தினம் (வண)

அநுபல்லவி.

மணந்தே உந்தனை
வினைந்தே பரந்தனை
இழந்தே வந்தனர் (வணங்)

கண்ணிகள்.

வருந்திடாதே பேயின் மயக்கத்தினால் நீயும்
பிறந்தனரே இயேசு பிதாமாதாவாகியும்
வந்தார் உனைத்தேடி
சென்றார் பிணைப்பட்டு
டிறந்தார் பாவிக்காய் (வணங்)

தேவ அன்பைத்தேடு ஜீவநதிகாடு
பூவி என்றே பாடு பாதம்வந்தேகூடு
சேர்ப்பார் உந்தனை
காப்பார் பாவத்தை
தீர்ப்பார் மகிழ்வுடன் (வணங்)

பக்தர்க்கே முத்தி கொடுத்திடும் வல்லவர்
பால்தனக்கே தயை பாராட்டும் நல்லவர்
பாதம் தனைப்பிடி
வேத முறைப்படி
போதம் பெறும்படி (வணங்)

---

24 (ஆண்டிப்பண்டாரம் என்றமெட்டு)
இராகம் தேசிகதோடி தாளம் ஆதி.

பல்லவி.

வந்தாதாரையா மிக நொந்தேன் பாரையா மேசியா

உன் தாபரமருள்வாய் என்பாவமேயவிழ்வாய்
அன்போடெனைப்பிடித்து அட்டியின்றிக் காத்திடுவாய் ()

உன்னதமகிமைவிட்டு உலகில்மனுவாகிக்கிட்டி
தன்னயமதையகற்றி தாணலேந்தன்மைபற்றி (வந்)

பாவப்பாரத்தால்மிகப் பாடுபட்டாய்தேகம்நோக
சாபத்தையேயழித்து சாட்சியானுப்ஜோதியாக (வந்)

மாதாபிதாகுருவே வணங்கும் தெய்வத்தருவே
வேதாகம முடிவே வேண்டினேனை காத்திடவே (வந்)

காசினியிலுன்னையன்றி ஈசனில்லையென்றறிந்து
பூசித்திடும் பாவின் பாவம் போக்கு அருளைசொரிந்து ()

---

25 (தேவாதி தேவா ஜெயவல்லவா என்றமெட்டு)

இராகம் பியாக் அடதாளம்.

கண்ணிகள்.

சர்வவியாபக சாமிநேய எங்கள்
தஞ்சம் உனையன்றி வேறில்லையே தேவா
வர்மம் வையாமல் துணைபுரியே உமை
வாழ்த்திப்புகழ்கின்றோம் பார்தநியே (சர்வ)

முத்திக்குவித்தாய் முளைத்தெழுந்தே அன்று
முன்னணைமீதி லமர்ந்திருந்தே பின்னும்
கத்தியழுதுகண்ணீர் சொரிந்தே எமைக்
காக்கப்பிறந்தாய் கந்தையணிந்தே (சர்வ)

மாடடை வீட்டையே தெரிந்தாய் ராஜன்
கூட கோபுரத்தையே இகழ்ந்தாய் புவி
நாடிப் பரந்தனையே துறந்தாய் திரம்
பாடித்துதித்திடவே சிறந்தாய் (சர்வ)

தித்திக்கும் தேனே திருவிருந்தே நரர்
தேடற்கரிய குருமருந்தே ஐயா
பக்தியுடன் பாட பால்க் கிசைந்தே வந்து
பார்த்தாவிதந்திடுவாய் மகிழ்ந்தே (சர்வ)

---

26 (அம்பிகா உன்மகன் குகன்—என்றமெட்டு)
இராகம் இந்துஸ்தான்தோடி தாளம் ஏகம்

சுந்தரா வந்து காரையா
நிந்தையால் நொந்தேன் பாரையா (சுந்)

விந்தையாய் பூவில் வந்தாய்
வேதியர் தனை இகழ்ந்தாய்
நொந்துமே வாதைப் பட்டாய்
நோவில்—சாவில்—பாவிக்காகவே (சுந்)

சித்த மிரங்கி வருவாய்
சேதமின்றிக் காத் திடுவாய்
முத்திதனை : யே புரிவாய்
மூவா—ஜீவா—தேவா—ஏகோவா (சுந்)

சேவித்தேனுன் பாதந் தனை
கோபிக்காய்நின் சேய னெனை
பாவிப்பாயே பால னாக
பாவின்—பாடல்—நாவி—னாலேயே (சுந்)

ஐந்துகா யத்தி னின்று
இந்தியரத் தத்தை நன்று
சந்ததம் தந் திடுவாய்
சாமி—யேசு—நேமி—என்றென்றும் (சுந்)

27 (திருப்புகழ் நாவேறுபாமணத்த—என்றமெட்டு)
இராகம் ஆனந்தபைரவி தாளம் ஜம்பை

தானாதியாகநின்ற தத்துவத்தை யேவிடுத்து
தாராள மாய்த்தமையே பிணையாக்கி
தார்வேந்தனென்றழைத்து சாஸ்திரிக ளோபணிய
தாயான மரியினிடத் தமர்ந்தாரே

ஆதாலேவந்தபவத் தீதாலே தேவனுமித்
தார்பூவில் மானிடனாய் உருவாகி
தூயாவியென்றழைத்த பேயோடே போர்புரிந்து
சோராத வீரனென ஜெயம்வாய்ந்தே

பாதாளலோகமதைச் சாவாலே தானடைந்து
[illegible]ரோனை ரக்ஷைசெய்து பிழைத்தேகி
பாதாளவிந்தமதைத் தேடுவோர் பணிந்துவர
பரலோக வாசமினி தடைந்தாரே
( )

[illegible] நினைந்து பாதமலர்
சிரகமேல் தொழுகில் அருள்மேவி
தீராத துன்பவினை நீறபரலோகக்கதி
( ) தெளிவான பாரதில் பெருவீரே

காதாலேகேட்டு உல காசாரத்தாலமிழ்ந்து
கர்த்தாதி கர்த்தர்தமை மறந்தாலோ
காணீரே நன்மைதனைத் தாமென்று பாலுரைக்கும்
கானசுவிசேஷநிலே நடப்பாயே

---

(28 (திருப்புகழ் இசைக்கதயேரும் கரியுரி என்றமெட்டு)
இராகம் காம்போதி தாளம் ஆதி.

சிவந்த அங்கி திரேகினிற்பூண்டு தினந்தோறும்
உகந்துவாரும் உனையான்காண மனுவேலா

ஆணி துளைத்த அன்பின்கர்த்தா வடிவேயெனைப்
பேணி ஆசீர் புரிந்திடுமையா மனுவேலா

முள்முடிசூடித் தொல்வினை தீர்த்து முடித்தாயே
புல்லன் என்னைநின்வழி நடத்தும் மனுவேலா

கள்ளனன்று களித்திடக்காட்சி கொடுத்தாயே
பிள்ளை என்னைப் பிடித்துநடத்திடும் மனுவேலா

அபயமென்றவர்க்காறுதல்தந்த அருள்நாதா
தயைமிகுந்து என் சஞ்சலம் நீக்கிடும் மனுவேலா

பகைகளை வென்றிடப் பாரச்சிலுவையில் பரிவாக
நகைபுரிந்தவர் நடுவில் மாண்டவீரா மனுவேலா

---

80 (ஆசைநேச விசுவாச ராஜா என்றமெட்டு)
இராகம் இந்துஸ்தான் காப்பி தாளம் ஏகம்.

பல்லவி

இயேசுநேசமனுவான ராஜா
இன்பசகவாசா சர்வேசா
பாசபந்தநாசா நம்பினேன்
பாதுகார் ஈசா பிரகாசா (இயேசு)

அநுபல்லவி.

ஏகனேவேதா இகபரபோதா
எளியேன் வினை தீர்த்தெனையாளுவாய் ஈசா (இயேசு)

தொகையறா.

தேவனின்சீலா திருமறை நூலா சிலுவையில்
தொங்கிய திருப்பாலா
வானவர்லோலா வரந்தரும்வேலா மாமரி
ஈன்றிட்ட மனுவேலா

பாட்டு.

பாவம் எந்தனைத் தீண்டிடாமல்
பாதுகாரையா மேசியா (பாவ)

பற்பல அற்புத மிப்புவி நாட்டி
நற்புகழ்பெறும் சற்குரு மூர்த்தி (பாவ)

தொகையறா.

சஞ்சலம் நீக்கிடக் கெஞ்சினேன் உந்தனை
தஞ்சம்நீ வந்து பாராய்
சச்சிதாநந்தமான இயேசுக்கிறிஸ்து
சாமியே என்னைக்காராய்

எடுப்பு.

நோய்க்—கத்திக்கத்தியே சுற்றிவருகுதே
பற்றிட்டுப்பற்றியே கிட்டி அடுக்குதே
காலா தேவர் இதுகருணாம்

கருவே கற்புள்ள உருவே திருவே மாந்தர் குருவே
உந்தன்—கற்பனைப்படி ஒழுக கற்பியும் பாலுக்குத்
தினம் கருவே (இயேசு)

---

31 (பக்திசாதிக்கவிடாது என்றமெட்டு)
இராகம் செஞ்சுருட்டி தாளம் சதுஸ்ரஜாதி திருபுடை.

பல்லவி

உத்தமதேவ அவதாரா ஏசு
இத்தரை மேவிய சிங்காரா

அநுபல்லவி.

சித்தமெத்தக்கிருபை வைத்தகுணசீலா
அத்தன் கிறிஸ்தையா ஆளும்மனுவேலா (உத்)

உந்தன் மகிமைதனை நாவால் ஏழை
எந்தவிதமுரைப்பேன் தேவா
அன்று ஆதமேவை தின்ற கனிவினை
வென்றுதிரை திறந்து நின்றாய் ஜெயவானாய் (உத்)

சுத்த பரிசுத்தராய் ஐயா அன்று
இத்தரையில் வசித்தீர் மெய்யாய்
ஆச்சரியமான அற்புதபோதனை
சாட்சியாக இப்போ கூச்சலிட்டாச்சே (உத்)

பக்தியோடே தினம் பாடி பல
பாதங்கள் தேடியே, ஓடி
சித்தியுடன் சேவிக்க செப்பாதுமுதாவி
வெற்றிபெறப்பெலம் வேண்டினேன் பாலன்னை (உத்)

---

---

(வந்தேமாதரமே என்றமெட்டு.)

இராகம் கல்யாணி.

பல்லவி.

([illegible]) தேவா கா நிதியே இயேசு
பாவ நாசா ஜீவநதியே (தேவா)

அனுபல்லவி.

பாவத்திரள் தோள் சுமந்த
பட்சமுள்ள நித்யஜோதி (தேவா)

மருவி எனை மணந்தே புவி
மனிதனான மகிமை கூவி
வதன பாதந்தனையே தேடி
வந்தேன் நொந்தேன் தந்தேனெனையே (தேவா)

உன்னைப் பலியாய்க் கொடுத்து
என்னைப்பிடித்தாய் பரிந்து
உருகி உன்னையே யடுத்து
ஓடி வாடி நாடியே வந்தேன் (தேவா)

நித்தியபிதாவிற்கே சொந்த
நேசமகன் இயேசு கர்த்தன்
தத்துவத்தையே புகழ்ந்தே
தாள் பணிந்து பாடியும் வந்தேன். (தேவா)

---

33 (சஜன ஜீவனு ராம சுகுண பூஷணு என்றமெட்டு)

இராகம் கமாஸ் தாளம் ரூபகம்.

பல்லவி.

மதன போதனை பாவி- வந்த பூரணா ஜேசு

அனுபல்லவி-

புவனரக்ஷகா உனைப் புகழ்வேன் நித்யமான்
பாவங்கை தகர்த்தோடிட மரி பாலனாய் வந்தவா (ஜேசு)

சரணங்கள்.

மேகவாகனமீதில்லேறிய விண்ணவா தேவா
ஆகமமுடிவாக வந்திட்ட அப்பனே மூவா
அண்டினேன் காவா பேயின் அச்சம்தீர் ஜீவா
அட்டிசொல்லியே விட்டிடாமலே ஆதரித்திட (ஜேசு)

தேடுவோர்க்கருள் கூடுமென்று செப்பிய சீலா
காடு நகரம் ஓடி நீதியை நாட்டிய வேலா
நம்பினேனையா பாதம் கும்பிட்டேன் மெய்யா
நாடிவந்தெனைச் சூடுவாய் முடி வாடிடாமலே (ஜேசு)

வாரும் எந்தனைக்காரும் இன்மய மானவா சீராய்
பாரும் பாலகன் பாரில்சாட்சியம் பகரவே நேராய்
பாதகாளரையா பெரும் பாவிநானையா
பக்தர் மெச்சிடும் நித்தியானந்த சுத்தனே அற்புதா (ஜேசு)

---

34 [ஹலிலோ ஹரி என்றமெட்டு]
இராகம் தோடி தாளம் ஆதி

பல்லவி.

பரிபூரண திருவடிதன்னையே பணிந்திட வருவீரே
தேவர் தொழும் (பரி)

அநுபல்லவி.

இருள்போக்கத் துணிவுடன் தனதுயிர்
ஈந்த நமதெஜமானவருடைய (பரிபூரண)

சரணங்கள்.

வாராய் திருச்சுதனடி தொழுதிட மௌனதபமிலங்க
வருவாயே துதிமிகுமீசனே வணங்கிடலாம் துலங்க
திரியேகன் வரமிகுதருவார்
அருள்தருமீஸ்பரனு ஈவருடைய (பரிபூரண)

பாராய் பரமானந்தமடைந்திட   பக்குவமாயடுத்தே
சீராய்த்திரு வாசகமெனுமறை   தினமுமிகப்படித்தே
ஆராய் அதனால் வரு மானந்தம்
அச்சமின்றித்தொடுத்தே தினம் தினமும் (பரி)

ஜீவாதாரமான கிருஸ்துவைத் தேடிப்பிடிப்பவர்க்கே
சாவேயணுகாதென ஓதிய   தன்மை கடைப்பிடித்தே
வா வா ஏசுவாகிய நித்தியம்
வாய்த்ததென்று பிடித்தே பாக்கியால் (பரி)

---

மங்கள பாட்டு.

(ஆறுதலடைமனமே கிறிஸ்துவுக்குள் என்றமெட்டு)

இராகம் துசாவந்தி தாளம் ஆதி.

பல்லவி.

மங்களம் மங்களமே   ஜெய சுப
மங்களம் மங்களமே

அநுபல்லவி.

எங்கும் ஏகமாய் நின்று   இலங்கிடும் பிதாவுக்கும்
துங்கன் ஏசுவுடன்   தூய ஆவிதனக்கும்   (மங்)

சரணங்கள்.

திருவடிகளில் மனிதனை   தேவசாயலாய்
செய்து தமது ஆவியை
உதித்தாயவனுக்குதியே   உலகையாள
உண்டுபண்ணின ஆதியின்
திரித்துவமகத்துவத்தின்   செய்கை அறிந்துதினம்
கிறிஸ்தியர்களாய்த்துதி   செலுத்திபுகழ்ந்துநவ   (மங்)

---